of English also and I am told that there is absolutely no deterioration in the standard of English particularly because of the Special steps that have been taken for the purpose of keeping up the standard of English.

**SRI K. R. NALLASIVAM :** தமிழ் மீடியம் எடுத்துக் கொண்டிருக்கிற மாணவர்களுக்கு ஆங்கிலத்தில் விசேஷ பயிற்சி கொடுப்பதற்கு அப்பாடத்தில் நேரம் அதிகப்படுத்தப்பட்டிருக்கிறதா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** தமிழில் வேறு பாடங்கள் படிக்கும்போது ஆங்கிலத்தில் படிப்பதைவிட சுலபமாக அதை கற்றுக்கொள்ள முடிகிறது. ஆகவே ஆங்கிலத்திற்கு கொஞ்சம் அதிகமான நேரம் ஒதுக்கப்பட்டு ஆசிரியர் எண்ணிக்கையில் ஓரளவு அதிகம் கொடுத்து அவர்களுக்கு ஆங்கிலத்தில் போதிக்க எற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

* 91 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the names of Colleges which have offered to shift to Tamil Medium; and

(*b*) whether they have written to the Government on the subject and if so, when and on what conditions?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) P.S.G. Arts College, Coimbatore; Nallamuthu Gounder Mahalingam College, Pollachi A.V.C. College, Mayuram; Sarah Tucker College, Palayamkottai, and Sri Avinashilingam Home Science College, Coimbatore, have offered to shift to Tamil medium in respect of certain courses in humanities of B.A. Degree. They have asked the Government to extend certain concessions in regard to fee remission, stipends, library grant, teaching grant, etc. The question of granting financial assistance in this respect is under consideration.

SRI K. VINAYAKAM : May I know whether they are all private colleges? Is it not a fact that Government have said that they will not give grants to some colleges if they did not switch on to Tamil medium after a time-limit?

THE HON. SRI C. SUBRAMANIAM : These are all private colleges. The question is with reference to 1962–63. That question does not arise out of this.

**SRI A. VEDARATHNAM :** தமிழ் மீடியம் வேண்டுமென்று வேறு எதாவது கல்லூரிகள் கோரிக்கை தந்தனவா அல்லது இந்த கல்லூரிகள் மட்டும்தான் கோரிக்கைகள் தந்தனவா என்பதை தயவுசெய்து அறிவிக்க முடியுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM :** இந்த கல்லூரிகள் மட்டும்தான் விண்ணப்பித்துக் கொண்டன.